ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

திருப்பனசை

# இராமாநுஜ திரிதசவெண்பா.

இஃது

திருப்பனசையென்னும்

நாட்டரசன் கோட்டையிலிருக்கும்

இளையாத்தக்குடியில் கழனிவர்சற்குடியார்

நாராயணன் செட்டியாரவர்கள் குமாரர்

**நா. கரு. ஐயாக்கருப்பன்செட்டியார்**

அவர்களால் இயற்றப்பட்டு

தெள்ளியன்வயலிலிருக்கும்

முத்துவையங்காரவர்கள் குமாரர்

பிரம்மஸ்ரீ

**சீநிவாசையங்காரவர்களால்**

சென்னை:

கலாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

பராபவ௵ ஆனி௴ ௧௬௨.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# சாற்றுக்கவி.



கும்பகோணமிருந்து வந்திருக்கும்

நாட்டரசன்கோட்டைத்

தமிழ்ப்பாடசாலை உபாத்தியாயர்

சு. வெள்ளைவாரணம்பிள்ளையவர்கள்

இயற்றியது.



## வெண்பா.

பூமா நுடருய்யப் போதந் தனையருளி
ராமா நுஜவெண்பா நன்கிசைத்தான்—பாமானுஞ்
செந்தமிழா ரும்பனசைச் செல்வனா ராயணவேள்
மைந்தனை யாக்கருப்ப மால்.

## விருத்தம்.

சந்தமறை யந்தணர் குலச்சிரி வாசநற்
சற்குணன் றெள் ளியன்வயல்
வந்தருள் சிறந்தகுரு தந்தசோ திடமுறை
வகுத்துரைக் கின்ற நாவான்

அந்திரு நிறைந்தபன சைக்கருப் பேந்திரனே
யன்ரா மாநு ஜற்குச்
செந்தமிழி னிற்றந்த பாவையச் சிட்டுச்
சிறந்திட வளித்தன் மாதோ.



கண்டிப்பட்டி

## மு. மூத்துராக்கு சேர்வையவர்கள்

இ ய ற் றி ய து.



வெண்பா.

ஒப்பிலா ராமா னுஜமுனிமே லோர்ந்திட்டு
முப்பதுவெண் பாவாய் மொழிந்திட்டான் - செப்பும்
பொருப்பனென்றும் போற்றப் பூம்பனசை யையாக்
கருப்பனென்ற நாமவணி கன்.

---



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

திருப்பனசை

# இராமாநுஜதிரிதசவெண்பா.

## நம்மாழ்வார்துதி.

### வெண்பா.

ஆதி பரமபதத் தையனரு ளாலணைவிட்
டோதரிய பூதூரி லேயுதித்த நாதனெழில்
மெய்யனிரா மாநுஜவா சாரியன்வெண் பாவிளம்பத்
துய்யசட கோபன் றுணை.

---

## நூல்.

பூப்பொழிலு நெல்வளமும் பொன்னிறைவும் பொங்கிமலர்
மாப்பொலியுந் தென்பனசை வாழ்வோங்கக்—காப்புகந்த
கோனே குணமலையே கோவேரா மாநுஜப்பூ
மானே மகிழ்ந்தெனையாள் வாய். (௧)

நீருவில னுந்தலமு நீள்புவியி லேநிறைந்த
சீரார்பூ தூர்மறையோர் செய்தவத்தாற்—பாரதனில்
வந்தவிரா மாநுஜவா சாரியமா வானவவென்
பந்தவினை தீரக்கண் பார். (௨)

ஆசூரி கேசவருக் காதிரைநா ளஞ்சேயாய்
மாசூரு தம்மறையோர் மாமனத்துட்—டேசூறு
ஞானம் பகர்ந்தநல்ல ராமா நுஜமுனியே
யானம்பி னேனின் னடி. (௩)

வையத் தவர்மனத்துள் வல்லிருளுக் கோர்ஞானத்
துய்யகதிர்ச் சூரியனாய்த் தோற்றியமெய்—யையனே
மாசறுசீ ரோங்குமிரா மாநுஜத யாபரமா
வாசமலர்த் தாளெனுளம் வை. (௪)

பொய்யர் மனோசிலையிற் பூவாநின் பூங்கமலத்
துய்யமலர்த் தாளென்முடி சூட்டியாள் செய்யபசும்
பொன்னே மணியே புனிதவிரா மாநுஜப்பூ
மன்னே மனமது வந்து. (௫)

நாரணனே நான்மறையு நற்பஞ்ச கிரத்தியத்துக்
காரணனென் றேயுரைக்குங் காட்சியே—யேரணமாய்க்
கொண்ட கொண்டலேமறையோர் கோவேராமாநுஜனே
தண்டா மனைப்பதத்தைத் தா. (௬)

பன்னிருவ ராழ்வார்கள் பாலுமா சாரியராய்
மன்னியதா சர்க்குவழி வந்ததொண்டா—இந்நிலத்தி
னின்றரா மாநுஜப்பேர் நித்தியனே நின்பதத்தை
என்றுமற வாவரமெற் கீ. (எ)

சாலைக் குளிர்கூபந் தண்பே ரருளாளர்
பாலுய்க்கும் பத்திமனப் பண்ணவனே—வேலைக்கு
நேராய் நிறைகருணை நீதரா மாநுஜனே
தாராயுன் கஞ்சமலர்த் தாள். (அ)

பொன்பெரிய நம்பியடி போற்றவவர் பூரணமாய்த்
துன்னு ரகசியத்துத் தொன்னூலை—நன்னயமாய்ச்
சாதிக்கப் பெற்றதனிச் சற்குணரா மாநுஜனே
ஆதியனந் தாவனந்தந் தாள். (கூ)

நல்லதிருக் கச்சிநகர் நம்பியரு ளன்னெறியைச்
சொல்லச் சுருதியெனத் தோய்ந்துநின்ற—வல்லவனே
பாஷியத்தைப் பண்ணிவைத்த பண்டிதரா மாநுஜனே
சேஷமுனி யேயுனருள் செய். (கo)

கோட்டியூர் நம்பிமனக் கோளறிய மூவாறு
நாட்டுந் தவனையுறு நாணவில—மீட்டுமனம்
வாடாமன் மந்திரங்கொண் மன்னேரா மாநுஜனே
தேடா வெனைச்சிறக்கச் செய். (கக)

என்றெளிப்பே ரந்தணனும் யாத்திரைக்கே சென்றுவஞ்ச
மொன்றியதை யோர்ந்துணர்ந்த வுத்தமனே—வன்றிறலாய்
வந்தமதப் புன்சமய மாற்றியரா மாநுஜசி
வந்தபதந் தந்தருளு வாய். (கஉ)

வில்லியும்வே டச்சியுமாய் விண்டுதிரு வோடுகச்சி
நல்விருட்கண் டேயத்த நாயகமே—பல்லுயிரைத்
தன்னுயிர்போ லெண்ணு தயைசாரு மிராமாநுஜனே
யென்னையுமே யாட்சொளினி. (கரு)

ஆளவந்த மாமுனியை யன்புளவா சாரியராய்க்
கேளுவந்து இட்டுங் கிளரொளியே—நாளவமாய்ப்
போகாத் தவம்புரிந்த புண்ணியரா மாநுஜனே
வாகா வுவந்துமகிழ் வா. (கச)

சீர்பெரிய நம்பிதிருத் தேவியென்னை தேய்த்தவர்பாற்
பாரிக்கி மூன்றுபிழை பாராட்டி—யூரறிய
மாசந்நி யாசியென வந்தரா மாநுஜனே
பாசமற வேயருட்கண் பார். (கரு)

மண்டியகூ ரத்தாழ்வான் மாமுதலி யாண்டானுந்
தண்டும் பவித்திரமாய்த் தான்றரித்து—வண்டுளப
மாலையணி மாற்கடிமை வாய்த்தரா மாநுஜனே
வாலறிவு தந்தெனையாள் வாய். (கசா)

கச்சிநகர் மன்சேய் கனபிரம ரட்சுவினுல்
அச்சம் புரிந்தா டலையகற்றி—நிச்சயமாய்
நின்ற பரத்துவ நிராமயரா மாநுஜனே
யின்றெனது நோய்தீர்ப்பை யே. (கஎ)

பொய்கையனைப் பூதனைமெய் போதமுறும் பேயானை
ஐயன் திருமழிசை யாழ்வானைக்—கைகுவிக்குஞ்
சொல்லரிய ஞானச் சுடரோரா மாநுஜனே
நல்லறிவு தந்தருண்மன் ணு. (கஅ)

வேதந் தனைத்தமிழான் மேதினியி லேவிரித்த
நாதனெனு நம்மாழ்வார் நாண்மலர்ப்பூம்—பாதமதை
சென்னிக் கணியெனவே சேர்க்குமிரா மாநுஜனே
தன்னிகரும் பொன்னடியைத் தா. (கக)

கூட்டு மதுரகவிக் கொண்டல்குல சேகரர்தா
ணூட்டு முளநலத்த நாயகமே—பாட்டளிசூழ்
தாரார் தடம்புயத்துத் தன்னளிரா மாநுஜனே
தாரா யெனக்குனருட் டாள். (உ0)

எத்திசையும் போற்று மெழிற்பெரியாழ் வார்விண்டு
சித்தர்திருத் தாண்மலரைச் சென்னியணி—யுத்தமனே
கோனே யமிர்த குணனேரா மாநுஜக்கோ
மானே மகிழ்ந்தெனையாள் வாய். (உக)

வேண்டாதார்க் கெட்டா விமலேவில்லிப் பூத்தூரின்
ஆண்டா ளடிக்கமல மாதரிக்க—வேண்டுதிருக்
கோலமாய் வந்தகுணக் குன்றேரா மாநுஜனே
மாலாய் மகிழ்ந்தென்முன் வா. (உஉ)

தொண்ட ரடிப்பொடியார் தூபதிருப் பாணுழ்வார்
புண்டரீகத் தாள்போற்றும் புண்ணியனே—யெண்டிசையும்
நல்ல வைணவத்தை நாட்டியரா மாநுஜனே
வல்லவனே வந்தெனையாள் வாய். (உங)

மாலரங்கர்க் கேழுமதின் மண்டபங்கோ யிற்பணிசெய்
சீலர்திரு மங்கையர்சேர்ச் செங்கமலக்—கான்மலர்கள்
உள்ளத் திருக்குமுய ருத்தமரா மாநுஜவென்
கள்ளத் திருக்ககற்றிக் கா. (உச)

பாரிற் பரசமயம் பாலிப்பார் கோளரியாய்
ஆரியநூ லாகமங்க ளாலமைத்துப்—பேரருளால்
ஆதிவை ணவநன் முக்கியரா மாநுஜனே
கோதகல வந்தெனையாட் கொள். (உரு)

பன்னேழ் தினம்வாதம் பண்ணினவ னும்பணிய
மன்னரங்கர் மாயாவா தம்வாதி—யென்னவுரை
அற்புதத்தா லானந்த மாகியரா மாநுஜனே
நற்பதந்தந் தாள்வாயிந் நாள். (உசு)

ஆழ்வார்க ளாலருணு லாயிரத்தை யம்புவியில்
வாழ்வார்க் குதவவரம் வாங்கிவந்த—ஆழ்தவத்தோன்
நாதமுனி தானளின நாடியரா மாநுஜனே
போதமெனக் கின்றே புரி. (உள)

செந்தா மரைநயனத் தேசுந் திருவதனத்
திந்தா ரொளியெழிலு மென்றடியேன்—சிந்தையினிற்
கண்டுகளிப் பேணினிய கற்பகரா மாநுஜனே
அண்டர்பிரா னேயெனையின் றாள். (உஅ)

பொய்யாம் பலசமயப் புன்மையர்புந் திக்கசட்டை
மெய்யாம் வைணவத்தா லேவிளக்கும்—ஐயாவுன்
அன்பர்க் கிகபரநன் றுக்கியரா மாநுஜனே
இன்புற் றெனையாள்வை யே. (உக)

கந்தசத்தன் மாபலிபொற் கண்ணன் கனகனையும்
வெந்தசத்தாய் வென்றுவிட்ட விண்டமயார்—சிந்தைமகி
ழாகப் பணிபுரியு மற்புதரா மாநுஜவென்
னூகப் பலபிணிதீர்த் தாள். (௩0)

முற்றிற்று.

